உ

சிவமயம்.

# சியாமளா தண்டகம்.





E. K. கிருஷ்ணமூர்த்தி ஐயர்,
இலந்துறை.

"குணநிதி" 1-வது பிரசுரம்.



1925.

ஸ்ரீ

சிவமயம்.

மகாகவி ஸ்ரீகாளிதாஸர் அருளிய

# சியாமலா தண்டகம்.

## மொழி பெயர்ப்பு.

---

ஆசிரியர்

E. K. கிருஷ்ணமூர்த்தி ஐயர்,

இலந்துறை.

---

ஸ்ரீ பிரஹத்சுந்தரகுசாம்பிகா பிரஸ்,

திருவிடைமருதூர்.

---



௲௯௨௭

விலை ] [ அணா 1½

இப்புஸ்தகம் வேண்டுவோர் 2 அணா ஸ்டாம்பு அனுப்பி அடியிற்கண்ட விலாசத்திற்கு எழுதிப் பெற்றுக்கொள்ளவும்.

(விலாஸம்.)

E. K. கிருஷ்ணமூர்த்தி ஐயர்,

இலந்துறை.

இராண்டார்கட்டளை போஸ்டு,

(Via) நாச்சியார்கோவில்.



சிவமயம்.

# முகவுரை.



ஸ்ரீ காளிதாஸ மஹாகவியைப்பற்றி ஒரு பண்டிதர், "வடமொழியிலே மோதிரவிரலுக்கு 'அநாமிகை' என்று பெயர் வந்ததற்குக் காரணம், மஹாகவிகளை எண்ணத்தொடங்கி முதன் முதலாக கவிஸார்வ பௌமராகிய காளிதாஸ மஹாகவி (ஒருவர்) என்று சுண்டுவிரலை மடக்கியாயிற்று, அடுத்தவிரலை மடக்குவதற்கு இதுகாறும் ஒருவரேனும் அவர்க்கீடான மஹாகவி எங்கும் இல்லையாதலால் அடுத்தவிரல் 'அநாமிகை' என்பது அர்த்தவத்தாகவே அமைந்துள்ளது" என்று வர்ணித்திருக்கிறார்.

அத்தகைய ஒப்பாரும், மிக்காரு மில்லாது மஹாகவிகளாகிற தாராகணங்களுக்குள்ளே பூரணசந்திரன் போல் விளங்காநின்ற ஸ்ரீகாளிதாஸ மகாகவியானவர்:-

சற்றேறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் வடநாட்டிலே ஓர் சிற்றூரிலே வைதிக நெறி

முறை தவறாது வாழ்ந்துவந்த ஓர் அந்தணோத்தமர், தனக்கு ஓர்நாள் வயிற்றிலுண்டான வலியின்காரணம் நன்வழக்கத்திற்கு விரோதமான ஓர் தாழ்ந்த ஜாதியினால் அளிக்கப்பட்ட பொருள் தன்உணவில் சேர்ந்துவிட்டதுதானென்று அறிந்து மனைவிமீது கோபித்துக்கொண்டு, (அவர் அதுகாறுந்தாழ்ந்த ஜாதியாரது ஸ்வத்தினால் ஜீவனஞ் செய்யாதவராகையால்) காசியாத்திரை போய்விட்டார். கர்ப்பவதியான அவரது மனைவியும் அஃதறிந்து பின்தொடர்ந்தாள். சின்னாட்களில் நடுவழியில் ஓர் சத்திரத்தில் பிறந்த ஆண்குழந்தையைக் கணவனதுகட்டளைப்படி அவள் அங்கேயே விட்டுச் செல்ல அதை ஓர் இடையன் எடுத்து வளர்த்து வந்தான். வயது வந்ததும் அச்சிறுவனும் அவ்விடையனது ஆடுகளை மேய்த்து ஜீவனம் செய்துவந்தான். இஃதிப்படியிருக்க, அந்த ராஜ்யத்தின் அரசகுமாரி மிகவும் கல்வி யறிவிற் சிறந்தவளாகவும், தன்னை வெல்லும் கல்விமானையே தேடி மணம்புரிவதென்ற (ஸ்வயம் வரக்) கொள்கையுடையவளாகவும், தன்னை நாடிவரும் மிகச் சிறந்த அரசகுமாரர்களையும் வென்று அவமதித்து அனுப்பிவிடுவது கண்டு வருந்திய மந்திரி



இப்பெண்ணுக்கு ஒரு முழு மூடனையே கணவனுக்கு வேன்; எனத் துணிந்து தேடிக்கொண்டிருக்குமளவில் ஓர் மரத்தின் நுனிக் கிளையில் உட்கார்ந்துகொண்டு அடிப்புறத்தை வெட்டிக்கொண்டிருந்த முற் கூறிய சிறுவனைக்கண்டு இவனே அதற்குரியவனெனத் தீர்மானித்து விஷயங்களைப் பக்குவமாய்த் தெரிவித்து சிறுவனை வாஸனை த்ரவ்யங்களாலும், ஆடையாபரணங்களாலும் அலங்கரித்துப் பல்லக்கிலேற்றி அழைத்துச் சென்று அரண்மனை சேர்ந்து உள்ளே சித்திரசாலை மார்க்கமாய்ச் செல்லுங்கால், அங்கு ஸ்ரீமத் ராமாயணம்முழுமையும் சித்திரித்திருப்பதில் ராவணனது சித்ரத்தைக் கண்டதும் அவன் ஓ! ராபணா!! என்றதைக் கேட்டு அங்கு சூழ்ந்துளோர் நகைப்பதை மந்திரியும் கூடவிருந்த வித்வான்களும் தடுத்து உடன் பிறந்தோராகிய கும்பகர்ண! விபீஷணர்களுக்கு "ப" காரம் இருப்பதால் இராவணனுக்கும் பகாரம் சேர்ந்து ராபணா என்றார் எனச் சாதுர்யமாய்ச் சமாதானங் கூறிக் கொலுமண்டபத்திற் கழைத்துச் சென்று மிகவும் கம்பீரமாக வீற்றிருக்கச் செய்தார்கள்

அதைக் கேட்ட ராஜபுத்ரியும் தான் இவ்வளவு காலமாக வருபவர்களை யெல்லாம் அவமதித்துக் காலங் கடத்தி வருவது தந்தை முதலானோருக்கு வருத்தத்தை உண்டாக்கி வருவதாலும், விதிவசத்தினாலும், வந்திருக்குமிவரை இப் பெரியாரெல்லாம் இவ்வளவு கவுரவிப்பதைக் கருதினால் இவர் ஓர் பெரும் புலவராகத் தானிருக்கக்கூடுமென விவாஹத்திற்கு உடன்பட உடனே இருவருக்கும் விவாஹம் நடந்தேறிற்று.

இவன் அன்றிரவு படுக்கையறை சென்று இது காறு மனுபவித்திராத அத்தகைய ஸுகமான படுக்கையை யடைந்ததும் மிக அயர்ந்த நித்திரையில் ஆழ்ந்துவிட்டான். பிறகு ராஜகுமாரி அங்குவந்து மிகுந்த விநயமாக வீணை முதலான வாத்யங்களைக் கானஞ் செய்தும், நித்திரை கலையாதது கண்டு தாம்பூலத்தை மெதுவாகப் புருஷன்வாயிலிடப் போகையில் அவன் பழைய ஆட்டுமந்தை ஞாபகத்தால் (ஆடுகள் முகத்தில் புழுக்கை போடுவதாய்க் கருதி) "சிச்சீ ஆடே; எட்டிப்போ" என்று திட்டிக்கொண்டே எழுவதைக் கண்ட ராஜகுமாரி மிகுந்த ஸந்தேகமடைந்து உன் உண்மையான வரலாறென்ன? என்று அதட்டிக்கேட்க

அவன் அவளை வணங்கி உண்மையைக் கூறிவிடவே அவள் தன் "விதி இருந்தவாறென்னே!" என வருந்திப் பிறகு தெளிவடைந்து அவனுக்கோர் அரிய மந்திரத்தை உபதேசித்து அவ்வூர் பத்ரகாளி ஆலயத்திற் சென்று அநுக்ரகம் பெற்றுவருமாறு ஆக்ஞாபித்தவண்ணஞ் சென்று மஹாகாளி தனது பீஜாக்ஷரத்தைச் சூலத்தினால் இவன் நாவிலே எழுதி அநுக்ரகிக்கப் பெற்றவுடனே வாணீ கடாக்ஷமுண்டாகி மஹாகாளியை வர்ணித்து வணங்கிய ஸ்தோத்ரமே "ச்யாமலா தண்டகம்" என்பது. மஹா காளியின் பரிபூரண அநுக்ரகம் பெற்றவராதலால் அவருக்குக் "காளிதாஸ மஹாகவி" என்ற பெயர் ப்ரஸித்தியாயிற்று.

அவர் பிறகு "குமாரஸம்பவம்," "மேகஸந்தேசம்," "ரகுவம்சம்" முதலிய காவ்யங்களையும், "மாளவிகாக்னிமித்ரம்," "விக்ரமோர்வசீயம்" "சாகுந்தலம்" முதலிய நாடகங்களையும் மற்றும்பல நூல்களையுமியற்றி பிரஸித்திபெற்றுக் கவிஸார்வபௌமரென விளங்கிவந்தாரென்பது கர்ணபரம்பரை.

இத்தகைய சிறப்புவாய்ந்த இந்நூலானது வடமொழியிலமைந்திருந்ததைத் தமிழ்மட்டுமறிந்தோரும்

சுவைத்தின்புறுமாறு மிகச் சாதுர்ய மாய்த் தமிழ்ச் செய்யுளாயியற்றி உபகரித்துள்ள சிரஞ்சீவி கிருஷ்ண மூர்த்தி ஐயரவர்களின் ஸாஹஸம் மிகவும் பாராட்டற் பாலதே.

காலை மாலைகளில் நியமத்துடன் இந்நூலைப் பாராயணஞ்செய்து வருவோர் பராசக்தியின் திருவருளால் எல்லா விருப்பங்களுங் கைகூடப்பெற்று எல்லா இடையூறுகளும் நீங்கிப் பேரானந்தப் பெருவாழ்வுற்றின்புறுவார் என்பது திண்ணம்.

எல்லாம் வல்ல இறைவன் அருளால் இவர் இனியும்இத்தகைய அரிய பல நூல்களியற்றி யுதவுமாறு ஆயுராரோக்ய ஐச்வர்யாதிகளைப் பெற்றின்புற்று நீடூழி வாழ்வாராக !

சுபம்!

"ஸமரஸகுடீரம்"
இலந்துறை,
21—10—25.

கங்கா ஜடேச சர்மா.



உ

சிவமயம்.

# சியாமலா தண்டகம்.

(அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.)

நவமணி பதித்த யாழில்
நல்லிசை பயிலு வாளை
யவனமிக் கெழிலி னாளை
யினியநன் மொழியி னாளை
உவமையில் நீல வண்ணத்
தொளிர்மணி மேனி யாளைத்
தவமுனி மதங்க னீன்ற
தநயையை யகத்திற் கொள்வாம்.

நவிலுறு காங்க ளான்கும்,
நளிர்மதி முடியுஞ், செய்ய
குவிமுலை யிரண்டுந், தூய
குங்கும வண்ண மெய்யுஞ்
சுவடுறு கரும்பு பாசாங்
குசமலர் துலங்குங் கையும்

மவிர்புவிக் கொருவ ளேயா
மன்னைநின் னடிகள் போற்றி.

மரகத வண்ண மேனி
மங்கைநன் மதுவிற் சிந்தை
விரவினள் கடம்பக் கானத்
துறைபவள் விரும்பியென் றும்,

பரவிய மங்க லஞ்செய்
பான்மைய ளுலக மீன்ற
கரவிலா வுமா தங்கி
கடைக்கணித் தருள்க மாதே.

மதங்கமா முனிவ னீன்ற
மதிமுகச் செல்வி வெல்க
இதங்கமழ் காவி வண்ணத்
தின்னருள் வாரி வெல்க
பதங்கொளின் னிசையிற் சிந்தை
பரவிய மங்கை வெல்க
விதங்கொளு மாடற் கிள்ளை
விழைவுறு கோதை வெல்க.



# “தண்டகம்”

## அகவற்பா



அமுத வெண்டிரை யார்கலி சூழ்தரு
தமனி யப்பெருந் தண்மணித் தீவினில்
நளிர்செய் வில்வ வனத்தி னனந்தலை
களித்தேன் முரலுங் கடம்ப வனத்துறை
விழைவுறு கழைத்தோள் விளங்கெழிற் செல்வீ!
புழைக்கை மாவுரிப் போர்வையன் றேவி!
ஆதர வுடன்மகிழ்ந் தின்னிசை பயிலத்
தாதவிழ் கடம்பத் தார்புனை கோதை
நிதப்ப நெடுந்தலந் தைவர நீள்புவிக்
கிதம்பயில் பனிவரை யீன்ற மென்கொடியே!
சிரமணிக் கதிர்க்குலஞ் செறிகதிர் பரப்பிக்
கருமுகி லாகங் கவினுறச் செய்பு
மவிர்மலர்க் கணைய னுடல்வில் லுறழும்
வாணுதற் கொடியின் வளம்பெறு மலரெனப்
பூணுநற் றிலகம் பொலிவுறுந் திருவே!
ஒளிதரு காதணித் தாளபந் திகளொணு
நளிர்மதிக் குலங்க ணன்னில வெறிக்கத்

தீட்டிய கபோலந் திகழ்மக ரிகையின்
நாணங் கமழ்தர நறுந்தேன் முரலுங்
கானமோ டியாழ்பயில் கானமும் பொருந்தி
யின்னிசை யளிக்கு மின்புடைத் தேவி!
நன்னர்யாழ் பயிலு நறுந்தொடை யசைவர
வானவர் சித்தர் வாழ்த்திடுந் திருவே!
மானறுஞ் சுவைத்தேன் மகிழ்ந்தினி தருந்தக்
காமரு கட்கடை யசையக் கவின்பெறு
தேமலர் நீலந் திகழ்செவித் திருவே!
நிறையுல குயிர்களி னினைப்பருள் கடலே!
ஆறைதரு சுவைதநீ ரநும்பிய வாணுத
நலந்தரு மெழிற்குல மனைய நாசிகையிற்
கலந்தொளி ரணியுடை மந்த்ரகா ரணியே!
முல்லைமென் முறுவன் முகத்தினி லொளிர்தரு
நல்லதக் கோல நலங்கிளர் திருவே!
தவளமென் முல்லைத் தந்தபந் திகளின்
றிவளொளி தவழுஞ் செவ்வித ழுடையாய்!
எழிலுறு தனியா ழிலங்கெழிற் கரத்தாய்!
கழிபெரும் பருவக் கலைமதி யெழுநாள்
வுரையெழிற் பயோததி பொங்கித் ததும்பத்

திரைகட லளித்தவெண் சங்குறழ் களத்தாய் !
கதிர்விடு மணிதிகழ் காசறு மவயவி
துதிபெறு மங்கலத் தொல்லுரு வினளே !
நவமணி வங்கியி னலம்பெறு கதிர்த்திர
ளிவர்தடந் தோளுடை யிருந்தவர் பேறே !
திசைபரந் தொளிர்மணிக் கங்கணந் தரித்துப்
பசையறு மனத்தினர் பழிச்சு நற் பெருமையாய் !
நாண்மலர்த் தாமரை நாணுறுங் கரத்தினாய் !
மாண்பெறு யௌவனப் பருவமெல் லியலே !
ஆரெழிற் குண்டலத் துணையணிந் தவளே !
தாரகா கணமெனத் தண்கதிர் விரிக்குந்
தாரமென் றொடைபுரள் தனிப்பெருந் தனத்துணை
பரிப்பமுன் வளைந்தொளிர் பைங்கொடி யிடையில்
திருக்கிளர் மடிப்புக டெரிதருந் திருவே !
பொன்னருங் கலசப் பூந்தனஞ் சுமந்து
மின்னொளிர் மேனி வளைந்துமுன் கழலிணை
மன்னுமூ வுலகும் வணங்கவீற் றிருப்பாய்.
துன்னெழில் வட்டச் சுழியெனு மடிக்கரை
பாசியொத் தொளிரு முரோமநல் லணியாய் !
காசறு மழலைக் கனிமொழிச் செல்வி !

இன்னிசை யரைஞா ணிருங்கழை வில்லி
தன்னெழில் நாணு நாணுறச் செய்யா
வியலொடு பொற்கலை யிலங்கு மெல் லியலே!
உயர்பெரும் பதும ராகமே கலையி
னெழிலுறு நிதம்பத் தலம்பொலன் வரையைப்
பழிக்குமா மதிநளிர் பசிய பூங்கொடியே!
பருவரைப் பலாசப் பனிமலர்ப் பூந்துகின்
மருவெழிற் குறங்குவான் மதகரிச் சிந்தூரப்
புழைக்கையை வென்றிடும் பச்சிலை மேனியாய்!
தழைமலர்ப் பகழியன் றூங்கரு மாவழு
மிணையிலா தொளிரு மிரும்புறக் கால்களி
னணிகெழு நடைபயி லரும்புகழ்ச் செல்வி!
வணங்குமெண் டிசைக்கா வலர்மனை வியரின்
மணங்கம ழளக மருகென மயங்கிப்
பனிமதி நிகர்க்கும் பதவுகிர்க் கலைமுடல்
நனிகறித் திடுமுபர் தனித்திரு வினளே!
வானவ ரியக்கர் பூதர் பிரமர்
தானவர் நிருருதி வளித்தீ யாதி
துலங்குமற் றிவர்மணி முடிக்குலந் தோய்தர
நலங்கிளர் சேவடி மணிநிறத் தொடுகலந்

தொளிமயக் குறமெழி லும்பர் நாயகியே!
நளிர்நவ மணித்தவி சிருந்துவெண் சங்கம்
பதுமநன் னிதியுடைப் பரவருந்தேவி!
விதுமுகத் தூர்க்கை வடுசெழிற் கேத்திர
பாலனோ டுறையும் பான்மையா ரணங்கே!
வாமதே விபொடெழில் வனிதையர் வலம்வரத்
தாமரை மலருறை தையலோ டெண்பெருங்
காமரு சத்திகள் கழலிணை வருடத்
தேமொழிப் பைரவித் தேவியர் வாழ்த்த
மணங்கிளர் வேணியு மாண்புறு மின்பமும்
புரிதரு நின்கழல் புவிமிசை வெல்க.
உரியமெய் யன்பர்க் குறுபுக ழளித்து
மறையினுட் பொருளாய் மாதவர் சிந்தையாய்
அறைதரு முலகெலா மமைந்தொளிர் பவளே!
வேய்ங்குழல் பயிலும் விரிமலர்க் கண்ணன்
பூங்கமலப்பதம் போற்றிடுந் திறத்தாய்!
விஞ்சையர் கவிதையின் வளம்பெறு பவளே!
பஞ்சடித் தெய்வ மடந்தையர் பரவி
விருப்புறு பயன்பெறு விறல்கழ லினளே!
இருமலர்க் கரங்களா லின்கவி யணைந்து

முரைத்திடு மாற்றனு மொளிர்தரு வண்ணமும்
விரைத்தட வரிகளும் விருப்புறு மெழிலும்
பாசிலை நிறத்துப் பருச்சிறை யிரண்டு
மாசறு பலாச மலர்நிறத் தலகு
மிலங்கெழிற் கிள்ளையை யெடுத்தரு மாடல்
நலம்பெறப் புரியவும்; நவிலுமற் றிருகரம்
படிகமா லிகையும் பல்கலைத் திரளின்
முடிவறு ஞான முழங்குபுத் தகமுந்
தரித்தவ ளென்றுனைத் தன்னகத் துன்னி
வெறித்தடங் கமல மெல்லடி பணிவோர்
நாவினி லிருந்து நலம்பெறு கவிக்கடல்
பூவுல கிதனுட் பொலிவுறச் செய்வாய்!
ஆணும் பெண்ணு மாயதோ ருருவெனப்
பேணிநின் கழலிணை போற்றிடும் பெற்றியர்
செழுந்திரு வெண்மருஞ் சேர்ந்திடப் புவிமிசை
தொழுந்தகை யினராய்த் துலங்குவ ரன்றே!
மதிபணி வேணியு நீலநன் மணிபின்
றுதிபெறு மேனியுந் தொழுதுள மகிழ்பவர்
பெறுவதற் கினியொரு பேறுமீங் குளதோ?
மறுவறு நின்கழல் போற்றிடு மாண்பினர்க்

கிறைதரு திரைக்கட லாடலம் பொய்கையா !
மிருந்தருச் செறிவன மின்மலர்ச் சோலையாம்
பெருந்திருப் புவியெலாம் பிறங்கெழி லிருக்கையாம் !
யந்திர வுருவுநீ ! மந்திர வுருவுநீ !
தந்திர வுருவுநீ ! சர்வமுந் திரையுநீ !
சத்திக னனைத்துநீ ! சக்கிர மனைத்துநீ !
வித்தக வண்ணநீ ! விளம்பிய வனைத்துநீ !
அலகில்பல் லுயிர்க்கு மன்னையே ! தமியனே
நிலைபெற வளித்தி நின்கழல் சரணே !!

சுபம் !!




திருவிடைமருதூர்,

விரைவில் உ வெளிவரும்!

# பாரத கீதம்.

(E. K. கிருஷ்ணமூர்த்தி ஐயர் இயற்றியது.)

இது ஓர் சிறந்த தேசீய நூல். தேச பக்தியையும், ஸ்வதந்திர உணர்ச்சியையும் வளர்க்கும் பல சிறப்பட்ட பாடல்களை உடையது. பாரதமக்கள் ஒவ்வொருவரிடமும் அவசியம் இருக்கவேண்டியது.

---

# "குணநிதி".

திருவிடைமருதூரினின்று மாதமிருமுறை வெளிவரும் ஓர் செந்தமிழ்ப் பத்திரிகை.

பத்திராதிபர் :—M. S. பிச்சைய தேசிகர்,

வருஷ சந்தா ரூ 1—0—0.

மானேஜர் "குணநிதி" ஆபீஸ்,

தெற்கு வீதி,

திருவிடைமருதூர் S. I. R.

---

## ஸ்ரீ பிரஹத்சுந்தர குசாம்பிகா அச்சுக்கூடம்,

தெற்கு வீதி, திருவிடைமருதூர்.

நமது அச்சுக்கூடத்தில், சிறிய கார்டு முதல் பெரிய பத்திரிகை வரையிலுள்ள எல்லாவித அச்சு வேலைகளும், ஆங்கிலத்திலும் தமிழிலும் குறித்த காலத்தில் குறைந்த சார்ஜுக்கு சுத்தமாய் செய்து கொடுக்கப்படும். ரூலிங், பைண்டிங் வேலைகளும் நேர்த்தியாய் செய்து தரக்கூடும். மானேஜர்.